உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# நம்பியின் நல்லதோழர்
# சேரமான் பெருமாணாயனார்
## சரித்திரச் சுருக்கம்.

பொன்வண்ணத்தந்தாதி, திருவாரூர் மும்மணிக்கோவை,
திருக்கைலாய ஞானவுலா, சேக்கிழார் சுவாமிகள்
திருவாக்கு.





திரு ஆரூர் தியாகேச பெருமான்

தியாகராஜன் கம்பெனி,
தமிழ்த்திருமறைக்கழகம்,
12, தம்புசெட்டி தெருவு, :: :: சென்னை.
1938

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# நம்பியின் நல்லதோழர் சேரமான் பெருமாணுயனுர்

## சரித்திரச் சுருக்கம்

பொன்வண்ணத்தந்தாதி, திருவாரூர் மும்மணிக்கோவை,
திருக்கைலாய ஞானவுலா, சேரமான் சுவாமிகள்
திருவாக்கு.





திருஆரூர் தியாகேச பெருமான்

தியாகராஜன் கம்பெனி

தமிழ்த்திருமறைக்கழகம்

12, தம்புசெட்டி தெரு, :: :: சென்னை.

வெகுதானிய ஐப்பசி சதுர்த்தி.

1938

விலை] [பை 6

53-3

உ

திருச்சிற்றம்பலம்

# சேரமான் பெருமாள் நாயனார்

## சரித்திரம்



இப்பொழுது மலையாளமென வழங்கும் மலைநாடு முற்காலத்திற் சேரநாடு என்னும் பெயருடன் விளங்கிற்று. சேரர் குலத்து அரசர்கள் ஆண்டு வந்ததினால் அந்நாடு சேரநாடு எனப்பட்டது. அந்நாட்டுக்குத் தலை நகர் கொடுங்கோளூர் என்பது. அவ்வூருக்கு மகோதை என்றும் பெயர் உண்டு. ஆயிரத்து நூறு வருடங்களுக்கு முன்பு பெருமாக் கோதையார் என்னும் பெயர் கொண்ட பெரியார் சைவம் தழைப்ப, உலகம் செய்த தவத்தால், அரன் அருளால், அச்சேரர் குலத்தில் பிறந்தனர். இவர் சிவன் கழலே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம் நிறைந்த கருத்தினராய், அரசர் தொழில் புரியாது, ஈசனுக்குப் பணி செய்து கிடப்பதே பெருந்தவ நெறியாகக் கொண்டு அணித்தாக உள்ள திருவஞ்சைக் களத்துத் திருக்கோயிலில் திருத்தொண்டு புரிந்து வருவாராயினார். அப்போது அரசாண்டு வந்த செங்கோற் பொறையன் என்னும் சேர அரசன் வீட்டின்பத்தில்ஆசை கொண்டவனாய்த் தவம் செய்யக் கருதி அரசு துறந்து தபோவனத்தை அடைந்தான். அது கண்ட அமைச்சர்கள் அவ்வரசாட்சியை மேற்கொள்ள வேண்டுவதற்காகத் திரு வஞ்சைக் களத்திலுள்ள பெருமாக் கோதையாரிடத்திற் போய் நிகழ்ந்த சேதிகளைச் சொல்லி, "நீங்களே அரசுரிமையை மேற்கொள்ள வேண்டும்," என்று அவரை மிகவும் வேண்டினர். நமது திருத்தொண்டுக்கு இது இடையூறாகுமே என அஞ்சின சேரர்பிரான் நமதிறைவன் திருவுளப் பாங்கை அறிவோமென்று, திருக்கோயிலுட் சென்று, இறைவன் முன்பு தொழுது தமது கருத்தை விண்ணப்பஞ்செய்தனர்.

இறைவனருளால் அரசு புரக்குந் திறமும், மெய்யன்பொடு இறைவனுக்கு வழிபாடியற்றும் ஆற்றலும், யாவும் யாரும் கழறின அறியும் உணர்வும், விறலும், கொடையும், படையும், வாகனம் முதலாம் மன்னர்க்குரியன சகலமும் கைவந் துறப் பெற்றார். நல்லநாளில் திருமகுடஞ் சூட்டப் பெற்றார். கழறிற்றறிவார் என்னுந் திருநாமமும் பெற்றார். ஒரு முறை, கொற்றக்குடை சாமரை முதலியன பொலிய யானை மீது இவர் நகர் வலம் வந்தபோது, மழையிலே கரைந்து உவருறி மேனி வெளுத்த வடிவு பொலிந்த வண்ணான் ஒருவன் தம் முன்னே வரக்கண்டு "ஹா! நீற்றுக் கோலம் நிரம்பி நம்பிரான் தமர் வருகின்றனரே!" என்று யானையி னின்று ஞேரேலென இழிந்து விரைந்து சென்று பெருங் காதலுடன் அவ்வண்ணானைக் கை தொழுதார். இதைக் கண்டு சிந்தை கலங்கின வண்ணான் "அரசே! யாரென்றடியேனைக் கொண்டது? அடியேன் அடிவண்ணானுயிற்றே" என்ன, சேரர்பிரானும் "அடியேன் அடிச்சேரன். நீர் என தன்புக்குகந்த திருநீற்றின் வேடத்தை நினைப்பித்தீர். வருந்தாது ஏகும்" எனக் கூறி யானைமீதேறினர். இத் துணைப் பத்திவாய்ந்த சேரர் பிரான் அகப்பகை, புறப்பகை யாவற்றையும் அறுத்துச் சோழராசன் பாண்டிய ராசன் என்னும் இருவருக்கும் நண்பராய் செங்கோல் செலுத்தி வந்தனர். நடராஜப் பெருமானை நித்தம் பூசனை செய்யும் பெருந்தவ ஒழுக்கத்தினராய் தனக்குரிய பேரரசும், அவ்வரசின் பயனும், தனது தவமும், தனது பொருளும், தனது பெருந்துணையும் இவையெல்லாம் "தில்லைத் திருச்சிற்றம்பலத்துள் ஆடுங்கழலே" எனத் தெளிந்த அன்பு கொண்டவராய் அன்புடன் ஈசனுக்கு அருச்சனை செய்து பூசையை முடிப்பார். பூசை முடிவில் கூத்தப் பெருமான் திருச்சிலம்பின் ஒலி கேட்பிப்பர். அதைக் கேட்டு சேரர் பிரான் மகிழ்ந்து வந்தனர். இங்ஙனம் வாழுநாளில் மதுரையில் அன்பு மிக்கவராய் தன்னை இசைப்பாடலால் பரவும் பாணபத்திரனுருக்குப் பெருஞ் செல்வம் கொடுக்க விரும்பிய இறைவன் பத்திரனுருடைய கனவில் எழுந்தருளி

என்பால் அன்பா லெப்பொழுதும் பரவு சேரன் தனக்கு உனக்கு வேண்டிய பொன். ஆடை மணி முதலியன எல்லாம் குறை வின்றிக் கொடுக்க ஓர் ஓலை தருகின்றேம். 'தாழாது ஏகிவருக" என்று சொல்லிக் கீழ்க்காட்டிய பாடலை வரைந்த திரு முகத்தைக் கொடுத்தனுப்பினர்.

"மதிமலி புரிசை மாடக் கூடற்
பதிமிசை நிலவு பானிற வரிச்சிற
கன்னம் பயில்பொழி லால வாயின்
மன்னிய சிவன்யான் மொழி தரு மாற்றம்

பருவக் கொண்மூப் படியெனப் பாவலர்க்
குரிமையி னுரிமையி னுதவி யொளிதிகழ்
குருமா மதிபுரை குலவிய குடைக்கீழ்ச்
செருமா வுகைக்குஞ் சேரலன் காண்க

பண்பா லியாழ்பயில் பாண பத்திரன்
றன்போ லென்பா லன்பன் றன்பாற்
காண்பது கருதிப் போந்தனன்
மாண்பொருள் கொடுத்து வரவிடுப் பதுவே."

பாணபத்திரரும் அத்திருமுகத்தைத் தலைமேற்கொண்டு சென்று சேரர் பிரானிடம் சேர்ப்பிக்க அதைக் கண்ட கொற்றவனர், கூத்தாடி, மொழிகுழற, கண்ணீர்பொழிய, புவிமேற் பலகால்விழுந்து, இறைவன் கருணையை வியந்து, வேண்டிய நிதிக்குவையைத் தந்து உதவியது போதா தென்று தமது அரசையும் பெற்றுக்கொள்ளுமென்று பாணபத்திரரை வேண்டினர். அதற்குப் பாணபத்திரர் அரசே! எனக்கு வேண்டுவனவற்றையே அடியேன் கொள்ள வேண்டுமென்பது இறைவன் ஆணை. ஆதலின் அரசும் அரசுறுப்பும் தாங்களே கைக் கொண்டருள வேண்டும்" என்று சொல்லி வணங்கித் தனக்குவேண்டிய நிதிகளை, எடுத்துக்கொண்டு மதுரைக்குப் போந்தனர். பின்பு ஒரு நாள் தனது பூசை முடியும் பொழுது நடராசப் பெருமானது சிலம்பொலி கேளாதொழிய சேரர்பிரான் "ஆ! கெட்டேன்! பூசையில் ஏதோ பிழை செய்தனன். எனக்கு யாதொரு இன்பமும் இனி இல்லை" என மன நொந்து

உடைவாளை யுருவித் தனது மார்பில் நாட்ட ஈசர் விரைந்து திருச்சிலம்பின் ஓசை மிகவும் இசைப்பித்து "அன்ப! தில்லையில் நாம் கூத்தாட அதைக் கண்டு மகிழ்ந்து வன்றொண்டன் நம்மைப் போற்றிப் பாடிக் கொண்டிருந்ததைக் கேட்டு வரத்தாழ்த்தோம்." எனக்கூறி யருளினர். இதைக் கேட்ட சேரர் பிரான் "என்னே! ஈசன் அருட்டிறம்" என ஈசன் பெருமையைப் போற்றி புலியூர்ப் பொன்னம்பலத்தையும் தன்னேரில்லா வன்றொண்டர் தமையும் நேரிற் காண வேண்டு மென்னும் ஆசை மேலிட்டவராய் புறப்பட்டுத் தில்லை மூதுரெய்தி, அளவிலின்பப் பெருங் கூத்தர் ஆட எடுத்த கழலை உளமும் புலனும் ஒரு வழிச் சென்று உருகப் போற்றினர். "பொன்வண்ணத் திருவந்தாதி" என்னும் அருமைச் சொன் மாலையைப் பாடினர். இறைவனும் அதற்குப் பரிசிலென்று தமது திருச்சிலம்பொலியைக் கேட்பித்தார். பின்னர் சேரர்பிரான் தில்லையின் நீங்கி வழியிலுள்ள பலதலங்களையும் வணங்கித் திருவாரூரடைந்து வன்றொண்டரது நட்பைப் பெற்று அவருக்குப் பெருந் தோழராய் உயிரன்றி உடம்பும் ஒன்றாகும் எனப் பெருமகிழ்ச்சியுடன் உள்ளங் கலந்திருந்தனர். அதனால், வன்றொண்டருக்கும் "சேரமான் தோழர்" என்னும் பெயர் விளங்கியது. சேரர் பெருமான் வன்றொண்டருடன் திருக்கோயிலுட் புகுந்து இறைவனைக் வண்டு தொழுது சந்நிதானத்தில் "திரு மும்மணிக்கோவை" என்னும் தாமியற்றிய நூலைப் பாடிக் கேட்பித்தார். பின்னர், வன்றொண்டருடன் ஆரூரில் உடனிருந்து அவருடன் கீழ் வேளூர், நாகைக்காரோணம் என்னுந் தலங்களை வணங்கி திருமறைக்காட்டை யடைந்து "சிறந்த அந்தாதியில் சிறப்பித்தனவே ஓதி"ப் பின்னர் அகத்தியான் பள்ளி, குழகர் கோயில் முதலிய தலங்களை வணங்கிப், பாண்டி நாட்டில் திருப்புத்தூர் இறைஞ்சி, மதுரை மூதூர் அணைந்து, ஆலவாய் அண்ணலார் தமக்குத் திருமுகமளித்த கருணையைப் பாராட்டி அங்கிருந்த பாண்டிய ராசன், சோழ ராசன் இவர்களுடன் அளவளாவிப் பின்னர்த் திருப்பூ

வணம், திரு ஆப்பனூர், திருவேடகம், திருப்பரங்குன்று, குற்ருலம், திருநெல்வேலி, திருஇராமேச்சுரம், திருச்சுழியல், காளையார் கோயில் (கானப்பேர்), திருப்புனவாயில், பாதாளீச்சுரம், முதலிய தலங்களை வணங்கித் திருநாவலூர்ப் பெருமானுடன் திருவாரூர் வந்து சேர்ந்தனர். அங்கு, பரவையார் செய்த உபசாரங்களைப் பெற்று பரவையாரும் இணங்க நம்பியாரூரரையும் உடன் அழைத்துச் சென்று தமது மலைநாட்டிற்கு ஏகப் பயணங் கொண்டனர். வழியில் திருக் கண்டியூர் தரிசித்து, வன்ருெண்டர் காவேரி வழிவிடுக்கப் பாடிய பாடலின் பெருந்துணையால் திருவையாற்றையுந் தரிசித்து, வழியிலுள்ள பல தலங்களை வணங்கி, வன்ருெண்டருடன் தமது மலைநாடடைந்தனர். அடைந்து நாவலூர் நம்பியை யானைமீது ஏறச் செய்து அவர்க்குப் பின் புறத்தில் தாம் ஏறி அவருக்குச் சாமரை வீசி தமது மாளிகை வரை உவந்து வந்தனர். இக்காட்சியைக் கண்ட அத் தலை நகர் வாசிகள்—

"நல்ல தோழர் நம்பெருமாள் தமக்கு நம்பியிவரென்பார்,
எல்லையில்லாத் தவமுன்பென் செய்தோமிவரைத் தொழவென்பார்;
செல்வமினியென் பெறுவதினிச் சிலம்பு நாட்டுக் கெனவுரைப்பார்;
சொல்லுந்தரமோ பெருமாள் செய் தொழிலைப் பாரீரெனத்தொழுவார்;"

சேரர்பிரானும் நம்பிக்குப் பல உபசாரங்கள் செய்து மகிழ்ந்தனர். பின்னர் ஆரூரர் திருவாரூருக்குத் தாம் போக வேண்டுமென்ச் சொல்ல அவருக்குச் சேரர்பிரான் பிரியாவிடை நல்கி வேண்டிய நிதிகளையுங் கொடுத்தனுப்பி ஆரூரரையே நினைந்து அரசுரிமை புரிந்திருந்தனர். சில நாள் கழிக்க நாவலூர்ப் பெருமான் மறுமுறை மலை நாட்டுக்கு வந்தனர். அப்பொழுது ஆரூரர் முதலை வாயுண்ட பாலனை அழைத்து வருகின்ருர் எனக்கேட்டு சேரர் பிரான்—

"செய்வ தொன்று மறியாது சிந்தை மகிழ்ந்து களி கூர்ந்தென்
ஐயனவணந் தானெவனயாரூ மண்ண லவணந்தானூரிற் [யெலா;
சைவ னவணந்தா னென்றுவணயாங் தலைவ னவணந்தான் றரணி
முய்ய வவணந்தா னவணநதானென்றேகை முரசஞ் சாற்றுவித்தார்."

திருவாரூரரும் சேரர்பெருமானும் ஒருவரை யொருவர் சந்தித்து ஆரா அன்புடன் வணங்கி மகிழ்ந்து அளவளாவி இருந்தனர். அங்ஙனம் இருக்கும் பொழுது ஒரு நாள் சேரபிரான் மஞ்சனமாடும் பொழுது இறைவன் திருவருள் கூடுதலினால் சுந்தரர் திருவஞ்சைக் களம் தரிசிக்கச் சென்றனர். இறைவன் அனுப்பிய வெள்ளை யானையின் மீது சுந்தரர் ஏறித் திருக்கயிலைக்குச் சேரர் பெருமானை நினைந்து சென்றனர். அதை அறிந்த சேரர் பிரான் உடனே அயலில் நின்றதோர் பரியின் மீதேறி திருவஞ்சைக் களம் சென்று அங்கு வெண்களிற்றின் மீது நம்பியாரூரர் விண்மேற் செல்வதைக் கண்டு தாம் ஏறிய பரியின் செவியிற் சிவமந்திரம் ஓதினர். அப்பரி விசும்பெழப் பாய்ந்து வன்றொண்டர் ஏறிச் செல்லும் யானையை வலங் கொண்டு அதன் முன்னாகச் சென்றது. சேரர் பிரானது படை வீரர் தமது உடலை வாளினால் வீழ்த்தி வீரயாக்கை யுடன் சேரர் பெருமானை அடைந்து சேவகம் ஏற்றனர். கயிலையைச் சுந்தரருடன் அடைந்த சேரர்பிரான் காவலர் களால் தடையுண்டு கோயில் திருவாயிலில் நின்றனர். உள்ளே தடையின்றிச் சென்ற வன்றொண்டர் இறைவனை வணங்கி, சுவாமி! “சேரலன் திருமணிவாயிலின் புறத்தினன்” எனச்செப்பினர். இதைக் கேட்ட இறைவன் “பெரிய தேவரைச் சென்று கொணர்க” எனக் கூற அங்ஙனமே சேரரும் இறைவன் திருமுன்பு எய்தி தூரத்தே தொழ இறைவன் “இங்கு நாம் அழையாமை நீ எய்தியது என்” என வினவினர். அரசனும் அஞ்சலி கூப்பி நின்று “சுவாமி! அடியனேன் ஆரூரன் கழல் போற்றி அவர் ஏறிவந்த யானை முன் சேவித்து வந்தனன். நின்கருணை வெள்ளம் முன் கொடு வந்து புகுதலின் திரு முன்பு வரப் பெற்றேன். சுவாமி! இனியொரு விண்ணப்பம் உளது. அடியேன் வேதமும் முனிவரும் துதிப்பரும் பெருமை வாய்ந்த உன்னை அன்பால் திருவுலாப் பாடினேன். திருச்செவி சாற்றிடப் பெற வேண்டும். என் பாசமகல வன்றொண்டர் நட்பு நான் பெற வைத்த பெருமானே! என, ஈசனும் “சொல்லுக! என்ற

னன். சேரர் பெருமானும் அவ்வுலாவைப்பாடிக் கேட்பித்தார். இறைவன் பெரிதும் மகிழ்ந்து சேரரை நோக்கி "ஆலால சுந்தரனுடன் நீ உடனமர்ந்து இருவீரும் நம் கண நாதர் தம் தலைமையில் தங்கும்" என்றருள் செய்தார். அவ்வாறே இருவரும் பணிந்தெழுந்து இறைவன் அருளைத் தலைமேற் கொண்டனர். அங்ஙனமே சேரர் பெருமான் "நன்மைசேர் கணநாதராய் அவர்செயும் நயப்புறுதொழில் பூண்டார்". சேரர் காவலர் பாடிய திருவுலாவை வெள்ளியங் கிரியிற் கேட்ட மாசாத்தனுர் அந்நூலை இப்பூவுலகில் திருப்பிடவூர் என்னுந் தலத்தில் வெளிப்படுத்தி விளங்கிட நாட்டினர்.

—oo—

## சுந்தரமூர்த்தி சுவாமிகள்

ஞான் ஆநூரரைச் சேரரை யல்லது நாமறியோம்
மானவ ஆக்கை யொடும்புக் கவரை வளரொளிப்பூண்
வானவ ராலும் மருவற் கரிய வடகயிலைக்
கோனவன் கோயில் பெருந்தவத் தோர்தங்கள் கூட்டத்திலே.

## அருணகிரி நாதர் திருப்புகழ்

நாத விந்துக லாதீ நமோநம—வேத மந்த்ரசொரூபா நமோநம
ஞான பண்டித சுவாமீ நமோநம வெகுகோடி-
நாமசம்புகு மாரா நமோநம—போக அந்தரி பாலா நமோநம
நாக பந்தமயூரா நமோநம பரசூரர்;
சேத தண்டவி நோதா நமோநம—கீதகிண்கிணி பாதா நமோநம
தீரசம்ப்ரம வீராநமோநம கிரிராஜ-
தீபமங்கள ஜோதீ நமோநம—தூயஅம்பல லீலா நமோ நம
தேவகுஞ்சரி பாகா நமோநம அருள்தாராய்;
ஈதலும்பல கோலால பூஜையும்—ஓதலுங்குண ஆசார நீதியும்
ஈரமுங்குரு சீர்பாத சேவையு மறவாத-
ஏழ்தலம்புகழ் காவேரியால்விளை—சோழமண்டலமீதேமனோகர
ராஜகெம்பிர நாடாளு நாயக வயலூரா;
ஆதரம்பயிலாரூரர் தோழமை-சேர்தல்கொண்டவ ரோடே முனாளில்
ஆடல்வெம்பரி மீதேறி மாகயி லையிலேகி
ஆதியந்தவு லாவாசு பாடிய—சேரர் கொங்குவைகாவூர்நனாடதில்
ஆவினன்குடி வாழ்வான தேவர்கள் பெருமாளே.

## சேரமான் பெருமாள் நாயனுர் அருளிய

# பொன்வண்ணத்தந்தாதி

திருச்சிற்றம்பலம்

பொன்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம்மேனிபொலிந்திலங்கு
மின்வண்ணம் எவ்வண்ணம்அவ்வண்ணம்வீழ்சடைவெள்ளிக்குன்றந்
தன்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம் மால்விடைதன்னைக்கண்ட
என்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ண மாகிய ஈசனுக்கே.

தவனே உலகுக்குத் தானே முதல்தான் படைத்தஎல்லாஞ்
சிவனே முழுதுமென் பார்சிவ லோகம் பெறுவர்செய்ய
அவனே அடல்விடை ஊர்தி கடலிடை நஞ்சம்உண்ட
பவனே யெனச்சொல்லு வாரும் பெறுவர்இப் பாரிடமே. ரு

நெஞ்சந் தளிர்விடக் கண்ணீர் ததும்ப முகமலர
அஞ்செங் கரதலங் கூம்பஅட் டாங்கம் அடிபணிந்து
தஞ்சொல் மலரால் அணியவல் லோர்கட்குத் தாழ்சடையான்
வஞ்சங் கடிந்து திருத்திவைத் தான்பெரு வானகமே. கக

படிறு யினசொல்லிப் பாழுடல் ஓம்பிப் பலகடைச்சென்
றிடறு தொழிதும் எழுநெஞ்ச மேஎரி யாடிஎம்மான்
கடறு யினநஞ்சம் உண்டபி ரான்கழல் சேர் தல்கண்டாய்
உடல்தா னுளபய னுவசொன் னேன் இவ் வுலகினுள்ளே. கரு

தீவினை யேனைநின் றைவ ரிராப்பகல் செத்தித்தின்ன
மேவின வாழ்க்கை வெறுத்தேன் வெறுத்துவிட் டேன் வினையும்
ஓவின துள்ளந் தெளிந்தது கள்ளங் கடிந்தடைந்தேன்
பாவின செஞ்சடை முக்கணன் ஆரணன் பாதங்களே. கஅ

கொடிமேல் இடபமும் கோவணக் கீளுமோர் கொக்கிறகும்
அடிமேற் கழலும் அகலத்தில் நீறும் ஐவாய் அரவும்
முடிமேல் மதியும் முருகலர் கொன்றையும் மூவிலைய
வடிவேல் வடிவுமென் கண்ணுளேப் போதும் வருகின்றவே. உ0

வருகின்ற மூப்பொடு தீப்பிணிக் கூற்றம் வைகற்குவைகல்
பொருகின்ற போர்க்கொன்று மாற்றகில் லேன்பொடி பூசிவந்துன்
அருகொன்றி நிற்க அருளுகண் டாய்அழல் வாய் அரவம்
வெருகொன்ற வெண்மதி செஞ்சடை மேல்வைத்த வேதியனே. உக

ஒழித்தேன் பிறவியை ஊர்ந்தேன் அறுபகை ஓங்கிற்றுள்ளம்
இழித்தேன் உடம்பினை எலேன் பிறரிடை இம்மனையும்
பழித்தேன் பழியே விளைக்கும்பஞ் சேந்தியக் குஞ்சரமுந்
தெழித்தேன் சிவனடி சேர்ந்தேன் இனிமிகத் தெள்ளியனே.

கண்டம் கரியன் கரியீ ருரியன் விரிதருசீர்
அண்டங் கடந்த பெருமான் சிறுமான் தரித்தபிரான்
பண்டன் பரம சிவனோர் பிரமன் சிரம்அரிந்த
புண்தங் கயிலன் பயிலார மார்பன்எம் புண்ணியனே. உகூ

தாழுஞ் சடைசடை மேலது கங்கையைக் கங்கைநங்கை
வாழுஞ் சடைசடை மேலது திங்களத் திங்கட்பிள்ளை
போழுஞ் சடைசடை மேலது பொங்கர(வு) அவ்வரவம்
வாழுஞ் சடைசடை மேலது கொன்றைஎம் மாமுனிக்கே. ௩௯

முனியே முருகலர் கொன்றையி னய்என்னை மூப்பொழித்த
கனியே கழலடி யல்லாற் களைகள்மற் றொன்றுமிலேன்
இனியேல் இருந்தவஞ் செய்யேன் திருந்த வஞ் சேசினைந்து
தனியேன் படுகின்ற சங்கடம்ஆர்க்கினிச் சாற்றுவனே. ௪௦

வலந்தான் கழல்இடம் பாடகம் பாம்பு வலம்இடமே
கலந்தான் வலம்நீ றிடஞ்சாந் தெரிவலம் பந்திடம்என்
பலந்தார் வலம்இடம் ஆடகம் வேல்வலம் ஆழியிடஞ்
சலந்தாழ் சடைவலந் தண்ணங் குழலிடஞ் சங்கரற்கே. ௪௫

எரிகின்ற தீயொத் துளசடை யீசற்கத் தீக்கிமையோர்
சொரிகின்ற பாற்கடல் போன்றது சூழ்புனல் அப்புனலிற்
சரிகின்ற திங்களோர் தோணியொக் கின்றதத்தோணியுய்ப்பான்
தெரிகின்ற திண்கழை போன்றுள தாலத் திறல்அரவே. ௬௭

கூறுமின் ஈசனைச் செய்ம்மின்குற் றேவல் குளிர்மின்கண்கள்
தேறுமின் சித்தந் தெளிமின் சிவனைச் செறுமின்செற்றம்
ஆறுமின் வேட்கை யறுமின் அவலம் இவைநெறியா
ஏறுமின் வானத் திருமின் விருந்தாம் இமையவர்க்கே. ௭௦

தறித்தாய் அயன்தலை சாய்த்தாய் சலந்தர னைத்தழலாப்
பொறித்தாய் அநங்கனைச் சுட்டாய் புரம்புன லுஞ்சடைமேற்
செறித்தாய்க் கிவைபுக ழாகின்ற கண்டிவள் சில்வளையும்
பறித்தாய்க் கிதுபழி யாகுங்கொ லாம்என்று பாவிப்பனே. ௧௮

சந்தித்த கூற்றுக்குக் கூற்றும் பிணிக்குத் தனிமருந்தாஞ்
சிந்திக்கிற் சிந்தா மணியாகித் தித்தித் தமுதமுமாம்
வந்திக்கில் வந்தென்னை மால்செய்யும் வானோர் வணங்கநின்ற
அந்திக்கண் ஆடியி னன் அடி யார்களுக் காவனவே. ௮௯

கொற்றவ னேயென்றுங் கோவணத் தாயென்றும் ஆவணத்தால்
நற்றவ னேயென்றும் நஞ்சுண்டி யேயென்று மஞ்சமைக்கப்
பெற்றவ னேயென்றும் பிஞ்ஞக னேயென்றும் மன்மதனைச்
செற்றவ னேயென்றும் நாளும் பரவும்என் சிந்தனையே. ௬௧

சிந்தனையே செய்ய மனம்அமைத்தேன் செப்ப நாஅமைத்தேன்
வந்தனை செய்யத் தலையமைத் தேன்கை தொழஅமைத்தேன்
பந்தனை செய்வதற் கன்பமைத் தேன்மெய் அரும்பவைத்தேன்
வெந்தவெண் ணீறணி யீசற் கிவையான் விதித்தனவே. ௯௨

பொய்யா நரகம் புகினுந் துறக்கினும் போந்துபுக்கிங்
குய்யா வுடம்பினொ டேர்வ நடப்ப பறப்பஎன்று
நையா விளியினும் நானிலம் ஆளினும் நான்மறைசேர்
மையார் மிடற்றான் அடிமற வாவரம் வேண்டுவனே. ௯௮

மாயன்நன் மாமணி கண்டன் வளர்சடை யாற்கடிமை
ஆயின தொண்டர் துறக்கம் பெறுவது சொல்லுடைத்தே
காய்சின ஆனை வளருங் கனக மலையருகே
போயின காக்கையும் அன்றே படைத்தது பொன்வண்ணமே. ௧௦௦

திருச்சிற்றம்பலம்

—oo✿oo—

## திருவாரூர் மும்மணிக்கோவை

மனமால் உறுதேமற் றென்செய்யும் வாய்ந்த
கனமால் விடையுடையோன் கண்டத்—தினமாகித்
தோன்றினகார் தோன்றிலதேர் சோர்ந்தனசங் கூர்ந்தனபீர்
கான்றனநீர் எந்திழையாள் கண்.

வந்தார் எதிர்சென்று நின்றேற் கொளிரும்வண் தார்தழைகள்
தந்தா ரவையொன்று மாற்றகில் லேன் தக்கன் வேள்விசெற்ற
செந்தா மரைவண்ணன் தீர்த்தச் சடையன் சிராமலைவாய்க்
கொந்தார் பொழிலணி நந்தா வனஞ்சூழ் குளிர்புனத்தே. ௧௨

அழகுடைக் கிண்கிணி அடிமிசை அரற்றத்
தொழிலுடைச் சிறுபறை பூண்டு தேரீர்த்
தொருகளி றுருட்டி ஒண்பொடி யாடிப்
பொருகளி றனைய பொக்கமொடு பிற்றாழ்ந்து

பூங்கழற் சிறாரொடு தாங்குநடை பயிற்றி
அக்கரை யுடுத்தி ஐம்படை கட்டி
ஒக்கரை யிருக்கும் ஒளிர்புன் குஞ்சிக்
குதலையங் கிளவிப் புதல்வன் தன்னை
உள்ளச் சொரிந்த வெள்ளத் தீம்பால்

உடைய வாகிய தடமென் கொங்கை
வேண்டாது பிரிந்த விரிபுனல் ஊரன்
பூண்டாங் ககலம் புல்குவ னெனப்போய்ப்

பெருமட முடையை வாழி வார்சடைக்
கொடுவெண் திங்கட் கொழுநிலவெய்க்குஞ்
சுடுபொடி யணிந்த துளங்கொளி யகலத்
தண்ண லாரூர் திண்ணிதிற் செய்த
சிறைகெழு செம்புனல் போல
நிறைவொடு நீங்காய் நெஞ்சம் நீயே.

---

## ஆதிஉலா என்கிற திருக் கைலாய ஞானவுலா

(சுருக்கம்)

[திருச்சிற்றம்பலம்]

திருமாலும் நான்முகனுந் தேர்ந்துணரா தன்றங்
கருமா லுறவழலாய் நின்ற — பெருமான் ;
பிறவாதே தோன்றினன் ; காணதே காண்பான் ;
துறவாதே யாக்கை துறந்தான் ; — முறைமையால்
ஆழாதே ஆழ்ந்தான் ; அகலாது அகலியான் ;
ஊழால் உயராதே ஓங்கினன் ; — சூழொளிநூல்
ஓதா துணர்ந்தான் ; நுணுகாது நுண்ணியான் ;
யாதும் அணுகா தணுகியான் ; — ஆதி
அரியாகிக் காப்பான் ; அயனய்ப் படைப்பான் ;
அரனய் அழிப்பவனுந் தானே ; — பரனய
தேவர் அறியாத தோற்றத்தான் ; தேவரைத்தான்
மேவிய வாறே விதித்தமைத்தான் ; — ஓவாதே
எவ்வுருவில் யாரொருவர் உள்குவார் உள்ளத்துள்
அவ்வுருவாய்த் தோன்றி அருள்கொடுப்பான் ; — எவ்வுருவுந்
தானேயாய் நின்றளிப்பான் ; தன்னிற் பிறிதுருவம்
ஏனோர்க்குங் காண்பரிய எம்பெருமான் ; — ஆனதன்
சீரார் சிவலோகந் தன்னுட் சிவபுரத்தில்
ஏரார் திருக்கோயி லுள்ளிருப்ப — ஆராய்ந்து
செங்க ணமரர் புறங்கடைக்கட் சென்றீண்டி
எங்கட்குக் காட்சியருள் என்றிரப்ப — ** அந்தமில்சீர்
எண்ணருங் கீர்த்தி எழுவர் இருடிகளும்
அண்ணல்மேல் ஆசிகள் தாமுணர்த்த — ஒண்ணிறத்த

பன்னிருவர் ஆதித்தர் பல்லாண் டெடுத்திசைப்ப;
மன்னும் அகத்தியன் யாழ் வாசிப்பப், — பொன்னியலும்
அங்கி கமழ்தூபம் ஏந்த, யமன் வந்து
மங்கல வாசகத்தால் வாழ்த்துரைப்பச், — செங்கண்
நிருதி முதலோர் நிழற் கலன்கள் ஏந்த,
வருணன் மணிக்கலசந் தாங்கத். — தெருவெலாம்
வாயு நனிவிளக்க, மாமழை நீர்தெளிப்பத்,
தூயசீர்ச் சோமன் குடையெடுப்ப, — மேவியசீர்
ஈசானன் வந்தடைப்பை கைக்கொள்ள, அச்விினிகள்
வாயார்ந்த மந்திரத்தால் வாழ்த்துரைப்பத், — தூய
உருத்திரர்கள் தோத்திரங்கள் சொல்லக் குபேரன்
திருத்தகு மாநிதியஞ் சிந்தக், — கருத்தமைந்த
கங்காநதி யமுனை யுள்ளுறுத்த தீர்த்தங்கள்
பொங்கு கவரி புடையிரட்டத், — தங்கிய
பைந்நாகம் எட்டுஞ் சுடரெடுப்பப், பைந்தறுகட்
கைந்நாகம் எட்டுங் கழல்வணங்க, — மெய்ந்நாக
மேகம் விதானமாய், மின்னெலாஞ் சூழ்கொடியாய்,
மேகத் துருமு முரசறையப், — போகஞ்சேர்
தும்புரு நாரதர்கள் பாடத், தொடர்ந்தெங்குங்
கொம்புருவ நுண்ணிடையார் கூத்தாட, — எம்பெருமான்
விண்ணோர் பணிய, உயர்ந்த விளங்கொளிசேர் [குடைய
வெண்ணார் மழவிடையை மேல்கொண்டாங்கு * * செருக்
சேனபதி மயில்மேல் முன் செல்ல, யானைமேல்
ஆனப்போர் இந்திரன் பின்படர, — ஆனத
அன்னத்தே ஏறி அயன் வலப்பால் கைபோதக்,
கன்னவிலுந் திண்டோட் கருடன்மேல் — மன்னிய
மால் இடப்பால் சொல்ல — * * ஐங்கணையான்
காமன் கொடிப்படைமுன் போதக், கதக்காரி
வாமன் புரவிமேல் வந்தணைய, — நாமஞ்சேர்
வேழ முகத்து விநாயகனை யுள்ளுறுத்துச்
சூழ்வளைக்கைத் தொண்டைவாய்க் கொண்டையொண்கட்
மங்கை எழுவரும் சூழ, மட நீலி [— தாழ்கூந்தல்

சிங்க அடலேற்றின்மேற் செல்ல,—* * ஈரூர்ந்த
காலங்கள் மூன்றுங் கணமுங் குணங்களும்
வால கிலியரும் வந்தீண்டி,—மேலே
"இமையோ பெருமானே போற்றி! எழில்சேர்
உமையாள் மணவாளா போற்றி!—எமையாளும்
தீயாடி போற்றி! சிவனே யடிபோற்றி!
ஈசனே எந்தாய் இறைபோற்றி!— தூயசீர்ச்
சங்கரனே போற்றி ஜடாமகுடத்தாய் போற்றி
பொங்கரவா பொன்னங் கழல்போற்றி!—அங்கொருநாள்
ஆய விழுப்போர் அருச்சுனனது ஆற்றற்குப்
பாசுபதம் ஈந்த பதம்போற்றி!— தூய
மலே மேலாய் போற்றி! மயானத்தாய் வானோர்
தலேமேலாய் போற்றி! தாள் போற்றி!—நிலேபோற்றி!
போற்றி!"—எனப் பூமாரி பெய்து புலன் கலங்க
நாற்றிசையும் எங்கும் நலம்பெருக—ஏற்றுக்
கொடியும் பதாகையும் கொற்றக் குடையும்
வடிவுடைய தொங்கலுஞ் சூழக்—கடிகமழும்
பூமாண் கருங்குழலார் உள்ளம் புதிதுண்பான்
வாமான ஈசன் வரும் பொழ்திற்—சேமேலே
வாமான ஈசன் பறவில்சீர் வானவர் தங்
கோமான் படை முழக்கங் கேட்டலுமே * * — பொற்
பேதை முதலாகப் பேரிளம்பெண் ணீருக [புடைய
மாதரவர் சேர மகிழ்ந்தீண்டி—***
கண்ணவனே யல்லது காணு! செவியவனது
எண்ணருஞ்சீர் அல்லது இசைகொள்ளா—அண்ணல்
கழலடி அல்லது கைதொழா அஃதான்று
அழலங்கைக் கொண்டான்மாட் டன்புஎன்—றெழிலுடைய
வெண்பா விரித்துரைக்கும் பொழ்தில், விளங்கொளிசேர்
கண்பரவு நெற்றிக் கறைக் கண்டான்—விண்பால்
அரியரணஞ் செற்றுங்கு அலேபுனலும் பர்ம்பும்

புரிசடைமேல் வைத்த புராணன்—எரியிரவில்
ஆடும் இறைவன் ** செஞ்சடையான் **
காரேறு கொன்றையந்தார்க் காபாலி, கட்டங்கன்,
ஊரேறு போந்த துலா.

திருச்சிற்றம்பலம்

---

## நம்பியாண்டார் நம்பி திருவந்தாதி

மன்னர் பிரான்எதிர் வண்ணான் உடல்உவர் ஊறிநீருர்
தன்னர் பிரான்தமர் போல வருதலுந் தான்வணங்க
என்னர் பிரான் "அடி வண்ணான்" என "அடிச் சேரன்" என்னுந்
தென்னர் பிரான் கழறிற்றறி வான்எனுஞ் சேரலனே, சச

சேரற்குத் தென்னா வலர்பெரு மாற்குச் சிவன் அளித்த
வீரக் கடகரி முன்புதன் பந்தி இவுளிவைத்த
வீரற்கு வென்றிக் கருப்புவில் வீரனை வெற்றிகொண்ட
சூரற் கெனதுள்ளம் நன்றுசெய் தாய்இன்று தொண்டுபட்டே.

திருக்சிற்றம்பலம்.

---

## சேக்கிழார் சுவாமிகள் திருவாக்கு

இன்பம் பெருகுந் திருத்தொண்டுக் கிடையூ றுக விவர்மொழிந்தா
ரன்பு நிலைமை வழுவாமை யரசு புரக்கு மருளுண்டே
வென்பு மரவும் புனைந்தாரை யிடைபெற் றறிவே னெனப்புக்கு
முன்பு தொழுது விண்ணப்பஞ் செய்ய முதல்வ ரருளினால். கய

உரிமை நாளி லோரைநல னெய்த மிக்க வுபகரணம்
பெருமை சிறக்க வேண்டுவன வெல்லாம் பிறங்க மங்கலஞ்செய்
திருமை யுலகுக் கொருமைமுடி கவித்தா ரெல்லா வுயிருமகிழ்
தருமை நிலைமை யறிந்துபுவி தாங்குங் கழறிற் றறிவார்தாம். (கசு)

வாசத் திருமஞ் சனம்பள்ளித் தாமஞ் சாந்த மணித்தூபந்
தேசிற் பெருகுஞ் செழுந்தீப முதலா யினவுந் திருவமுது
மீசற் கேற்ற பரிசினு வருச்சித் தருள வெந்நாளும்
பூசைக் கமர்ந்த பெருங்கூத்தர் பொற்பார் சிலம்பி னொலியளித்தார்.

ஆடற் சிலம்பி னொலிகேளா வுடைவா ளகற்றி யங்கைமலர்
கூடத் தலைமேற் குவித்தருளிக் கொண்டு விழுந்து தொழுதெழுந்து
நீடப் பரவி மொழிகின்றார் நெடுமால் பிரம னருமறைமுன்
றேடற் கரியாய் திருவருண்முன் செய்யா தொழிந்த தென்னென்றார்.

என்ற பொழுதி லிறைவர்தா மெதிர்நின் றருளா தெழுமொலியான்
மன்றி னிடைநங் கூத்தாடல் வந்து வணங்கி வன்றொண்ட
னென்று முணர்வா னமைப்போற்றி யுரைசேர் பதிகம் பாடுதலா
னின்று கேட்டு வரத்தாழ்த்தோ மென்றா ரவரை நினைப்பிப்பார். (சச)

வந்து சேரர் பெருமானார் மன்னுந் திருவா ரூரெய்த
வந்த ணாளர் பெருமானு மரசர் பெருமான் வரவேற்றுச்
சிந்தை மகிழ வெதிர்கொண்டு சென்று கிடைத்தார் சேரலனார்
சந்த விரைத்தார் வன்றொண்டர் முன்பு விருப்பி னுடன்றாழ்ந்தார்.

ஆன நிலைமை கண்டதிருத் தொண்ட ரளவின் மகிழ்வெய்த
மானச் சேரர் பெருமானார் தாமும் வன்றொண் டருங்கலந்த
பான்மை நண்பாற் **சேரமான் றோழ** ரென்று பார்பரவு
மேன்மை நாம முனைப்பாடி வேந்தர்க் காகி விளங்கியதால்.

ஒக்க வமுது செய்தருள வுயர்ந்த தவத்துப் பரவையார்
மிக்க விருப்பி லமுதுசெய்வித் தருளி மேவும் பரிசனங்க
டக்க வகையா லறுசுவையுந் தாம்வேண் டியவா றினிதருந்தத்
தொக்க மகிழ்ச்சி களிசிறப்பத் தூய விருந்தின் கடன்முடித்தார்.

தொழுது திளைத்துப் புறம்போந்து தோன்றப் பண்ணும் பிடிமேற்
முழுது மேத்த நம்பியைமுன் பேற்றிப் பின்பு தாமேறிப் [பார்
பழுதின் மணிச்சா மரைவீசிப் பைம்பொன் மணிமா ளிகையில்வரும்
பொழுது மறுகி லிருபுடையு மிடைந்தார் வாழ்த்திப் புகல்கின்றார்.

## வெள்ளானைச் சருக்கம்

ஒருவ ரொருவ ரிற்கலந்து குறைபா டின்றி யுயர்காத
லிருவர் நண்பின் செயல்கண்ட விரண்டு திறத்து மாந்தர்களும்
பெருகு மகிழ்ச்சி கலந்தார்த்தார் பெருமாள் தமிழின் பெருமாளை
வருகை வரையின் மிசையேற்றித் தாம்பின் மதிவெண் குடைகவித்
தார்.

சேரர் தம்பிரான் றம்பிரான் றோழர்தஞ் செயலறிந் தப்போதே[வார்
சார நின்றதோர் பரியினை மிசைக்கொண்டு திருவஞ்சைக் காளஞ்சார்
வீர வெண்களி றுகைத்துவிண் மேற்செலு மெய்த்தொண்டர்
தமைக்கண்டார்
பாரினின்றிலர் சென்றதம் மனத்தொடு பரியுமுன் செலவிட்டார் ருரு

விட்ட வெம்பரிச் செவியினிற் புவிமுதல் வேந்தர்தாம் விதியாலே
யிட்ட மாஞ்சிவ மந்திரமோதலி னிருவிசும் பெழப் பாய்ந்து [தை
மட்ட லர்ந்தபைந் தெரியல்வன் றொண்டர்மேற் கொண்டமா தங்கத்
முட்ட வெய்திமுன் வலங்கொண்டு சென்றது மற்றதன் முன்னாக ருசு

அங்க ணெய்திய திருவணுக் கன்றிரு வாயிலி னடற்சேரர்
தங்கள் காவலர் தடையுண்டு நின்றனர் தம்பிரா னருளாலே
பொங்கு மாமதம் பொழிந்தவெள்ளானையி னும்பர்போற்றிடப்போந்த
நங்கள் காவலர் நாவலர் காவலர் நண்ணினர் திருமுன்பு. சச

நின்ற வன்றொண்டர் நீரணி வேணிய நின்மலர்க் கழல்சாரச்
சென்று சேரலன் றிருமணி வாயிலின் புறத்தின னெனச்செப்பக்
குன்ற வில்லியார் பெரியதே வரைச்சென்று கொணர்கென வதி
ரெய்வ
வென்றி வானவர்க் கருளிப்பா டெனவவர் கழல்வீழ்ந்து விரைந்
தெய்தி. சச



மங்கை பாகர்தந் திருமுன்பு சேய்த்தாக வந்தித்து மகிழ்வெய்திப்
பொங்கு மன்பினிற் சேரலர் போற்றிடப் புதுமதி யலேகின்ற
கங்கை வார்சடைக் கயிலேயார் திரு முறுவலின் கதிர்காட்டி
யிங்கு நாமழை யாமைச் [illegible] தென்னென வருள்செய்தார். சரு

அரச ரஞ்சலி கூப்பிநின் றடியனே னூரர் கழல்போற்றிப் [ண்
புரசை யானை முன் சேவித்து வந்தனன் மொழியுநின் கருணைத்தெ
டிரைசெய் வெள்ளமுன் கொடுவந்து புகுதலிற் றிருமுன்பு வரப்
பெற்றேன்
விரைசெய் கொன்றைசேர் வேணியா யினியொரு விண்ணப்ப
முளதென்று. சசு

பெருகு வேதமு முனிவருந் துதிப்பரும் பெருமையா யுனையன்பாற்
றிருவு லாப்புறம் பாடினேன் றிருச்செவி சாத்திடப் பெறவேண்டு
மருவு பாசத்தை யகன்றிட வன்றொண்டர் கூட்டம்வைத் தாயென்ன
வருளு மீசருஞ் சொல்லுக வென்றன ரன்பருங் கேட்பித்தார்.

சேரர் காவலர் விண்ணப்பஞ் செய்தவத் திருவுலாப் புறமன்று
சாரல் வெள்ளியங் கயிலேயிற் கேட்டமா சாத்தனார் தரித்திந்தப்
பாரில் வேதியர் திருப்பிடவூர்தனில் வெளிப்படப் பகர்ந்தெங்கு
நார வேலேசூ முலகினில் விளங்கிட நாட்டினர் நலத்தாலே.

—oo:o:oo—

என்று மின்பம் பெருகு மியல்பினால்
ஒன்று காதலித் துள்ளமு மோங்கிட
மன்று ளாரடி யாரவர் வான்புகழ்
நின்ற தெங்கு நிலவி யுலகெலாம்.

———